## ॥ भगवान्मानसपूजा ॥

## பகவன் மானஸ பூஜா!

(1)

हृदम्भोजे कृष्णः सजलजलदश्यामलतनुः
सरोजाक्षः स्रग्वी मुकुटकटकाद्याभरणवान् ।
शरद्राकानाथप्रतिमवदनः श्रीमुरलिकां
वहन्ध्येयो गोपीगणपरिवृतः कुङ्कमचितः ॥

ஹ்ருதம்போஜே க்ருஷ்ண: ஸஜலஜலதச்யாமலதனு:
ஸரோஜாக்ஷ: ஸ்ரக்வீ முகுட கடகாத்யாபரணவான்।
சரத்ராகாநாதப்ரதிமவதன: ஸ்ரீமுரலிகாம்
வஹந்த்யேயோ கோபீகண பரிவ்ருத: குங்குமசித:॥

நீருண்ட முகில்போல் கரிய திருமேனியும், தாமரைக்கண்களும், வன மாலையும், கிரீடம், கங்கணம் முதலிய ஆபரணங்களும் கொண்டவராய், சரத்கால பௌர்ணமீ சந்திரனை யொத்த முகத்துடன் கோபியர் புடை சூழ, குங்குமாங்கிதரான ஸ்ரீகிருஷ்ணர் புல்லாங்குழல் ஊதுபவராக மனதில் தியானிக்கவேண்டும்.

(2)

पयोऽम्भोधेर्द्वीपान्मम हृदयमायाहि भगवन्
मणिव्रातभ्राजत्कनकवरपीठं भज हरे ।
सुचिह्नौ ते पादौ यदुकुल नेनेज्मि सुजलैः
गृहाणेदं दूर्वादलजलवदर्घ्यं मुररिपो ॥

பயோऽம்போதேர்த்வீபாத் மம ஹ்ருதய மாயாஹி பகவன்
மணிவ்ராதப் ராஜத்கனகவரபீடம் பஜ ஹரே।
ஸுசிஹ்நௌ தே பாதௌ யதுகுல நேநேஜ்மி ஸுஜலை:
க்ருஹாணேதம் தூர்வாதல ஜலவதர்க்யம்
முரரிபோ॥

ஹேபகவன்! பாற்கடல் தீவிலிருந்து என் ஹ்ருதயத்தில் குடிகொள்ளலாம். ஹேஹரே! பல ரத்னக்கற்கள் இழைத்த தங்க பீடத்தை அமர்ந்தருள்வீராக. நல்ல ஜலங்கொண்டு பத்ம-சக்ர-அடையாளம் கொண்ட உமது சரணங்களை அலம்பி தூய்மைப் படுத்துகிறேன். ஹேமுராரிபோ இளம் புல்லடங்கிய அர்க்யத்தைஸ்வீ கரிக்கலாமே!

(3)

त्वमाचामोपेन्द्र त्रिदशसरिदम्भोऽतिशिशिरं
भजस्वेमं पञ्चामृतफलरसाप्लावमघहन् ।
द्युनद्याः कालिन्द्या अपि कनककुंभस्थितमिदं
जलं तेन स्नानं कुरु कुरु कुरुष्वाचमनकम् ॥

த்வமாசாமோபேந்த்ர த்ரிதசஸரிதம்போऽதிசிசிரம்
பஜஸ்வேம் பஞ்சாம்ருத பல ரஸாப்லாவ மகஹன்।
த்யுநத்யா: காலிந்த்யா அபி கனக கும்பஸ்திதமிதம்
ஜலம் தேந ஸ்நானம் குரு குரு குருஷ்வாசமநகம்॥

ஹே உபேந்திர! மிகக் குளிர்ந்த தேவலோக கங்கைத் தண்ணீரை ஆசமநம் செய்யலாமே! பாபம் நீக்கும்பரமனே! இந்த பஞ்சாமிர்த பழரஸஸ்நானத்தை ஏற்கலாமே! இதோ இது ஆகாசகங்கையினின்றும், யமுனையிலிருந்தும் தங்கக்குடத்தில் சேகரித்த ஜலம் உள்ளது. இதனால் ஸ்நானம், ஆசமனம் செய்யலாமே.

(4)

तटिद्वर्णे वस्त्रे भज विजयकान्ताधिहरण
प्रलम्बारिभ्रातर्मृदुल मुपवीतं कुरु गले ।
ललाटे पाटीरं मृगमदयुतं धारय हरे
गृहाणेदं माल्यं शतदलतुलस्यादिरचितम् ॥

தடித்வர்ணே வஸ்த்ரே பஜ விஜயகாந்தாதிஹரண
ப்ரலம்பாரிப்ராத: ம்ருதுல முபவீதம் குரு கலே।
லலாடே பாடீரம் ம்ருகமதயுதம் தாரய ஹரே
க்ருஹாணேதம் மால்யம் சததல துலஸ்யாதி
ரசிதம்॥

ஹேலக்ஷ்மீகாந்த! பாபங்களை நீக்கும் பலராமன் தம்பியே! மின்னலையொத்த இந்த இரண்டு வஸ்திரங்களையும், ம்ருதுவான உபவீதத்தையும் ஏற்று அருள வேண்டும். ஹே ஹரே! நெற்றியில் கஸ்தூரி கலந்த இந்த சந்தனத்தை இட்டுக் கொள்ளலாம். தாமரை, துளஸி முதலியவற்றாலான இந்த மாலையையும் தரித்துக் கொள்ளலாம்.

(5)

दशाङ्गं धूपं सद्वरदचरणाग्रेऽर्पितमिदं
मुखं दीपेनेन्दुप्रभ विरजसं देव कलये ।
इमौ पाणी वाणीपतिनुत सकर्पूररजसा
विशोध्याग्रे दत्तं सलिलमिदमाचाम नृहरे ॥

தசாங்கம் தூபம் ஸத்வரத சரணாக்ரேऽர்பிதமிதம்
முகம் தீபேநேந்துப்ரப விரஜஸம் தேவ கலயே।
இமௌ பாணீ வாணீபதிநுத ஸகர்பூர ரஜஸா
விசோத்யாக்ரே தத்தம் ஸலிலமிதமாசாம ந்ருஹரே॥

நல்லோருக்கு வரமருளும் தேவ! தசாங்கம் கமழும் இந்த தூபம் உமது திருவடிகளில் ஸமர்ப்பிக்கப்படுகிறது. சந்திரக்கலையழகுடையோனே! இந்த தீபத்தினால் உமது முகத்தை விளக்கம் செய்கிறேனே! பிரமன் போற்றும் பரமனே! கற்பூரம் நிறைந்த பொடியால் கைகளை சுத்தம் செய்து இந்த நீரைப்பருகலாமே!

(6)

सदातृप्तान्नं षड्रसवदखिलव्यञ्जनयुतं
सुवर्णामत्रे गोघृतचषकयुक्ते स्थितमिदम् ।
यशोदासूनो तत्परमदययाशान सखिभिः
प्रसादं वाञ्छद्भिः सह तदनु नीरं पिब विभो ॥

ஸதாத்ருப்தான்னம் ஷட்ரஸவதகிலவ்யந்ஜனயுதம்
ஸுவர்ணமத்ரே கோக்ருதசஷகயுக்தே ஸ்திதமிதம்।
யசோதாஸூனோ தத்பரமதயயாசான ஸகிபிঃ
ப்ரஸாதம் வாஞ்சத்பிঃ ஸஹ ததனு நீரம் பிப விபோ॥

ஏ யசோதையின் மைந்தனே! ஆறுசுவை கொண்டதும், அனைத்துவ்யஞ்ஜனங்களடங்கியதும், தங்கத்தட்டில் பரிமாறியதும், பசுநெய்க்கிண்ணத்துடன் கூடியதுமான இந்த அன்னத்தை திருப்திவரும் வரை புஜிக்கலாமே! உடன், உமது பிரசாதம் வேண்டுமென அவா கொண்ட நண்பர்களையும் சேர்த்து சாப்பிட்ட பின் தண்ணீரைப் பருகலாம்.

(7)

सचूर्णं ताम्बूलं मुखशुचिकरं भक्षय हरे
फलं स्वाद प्रीत्या परिमलवदास्वादय चिरम् ।
सपर्यापर्याप्त्यै कनकमणिजातं स्थितमिदं
प्रदीपैरारातिं जलधितनयाश्लिष्ट रचये ॥

ஸசூர்ணம் தாம்பூலம் முககசிகரம் பக்ஷய ஹரே।
பலம் ஸ்வாத ப்ரீத்யா பரிமலவதாஸ்வாதய சிரம்।
ஸபர்யா பர்யாப்த்யை கனகமணி ஜாதம் ஸ்திதமிதம்
ப்ரதீபைராராதிம் ஜலதிதநயாச்விஷ்ட ரசயே॥

ஹேஹரே! வாய்சுத்தி செய்யும் பாக்குப்பொடி கலந்த தாம்பூலத்தை உட்கொள்ளலாமே! வாஸனையுள்ள பழங்களையும் உவகையுடன் ருசித்து சாப்பிடலாமே! பூஜை பூர்த்தியாவதையொட்டி தங்கம், இரத்தினம் இவையுடன் தீபங்களுங் காட்டி ஆரார்திகாட்டி உபசரிக்கிறேன்.

(8)

विजातीयैः पुष्पैरतिसुरभिभिर्बिल्वतुलसी –
युतैश्चेमं पुष्पाञ्जलिमजित ते मुर्ध्नि निदधे।
तव प्रादक्षिण्यक्रमणमघविध्वंसि रचितं
चतुर्वारं विष्णो जनिपथगतेश्चान्तविदुषा॥

விஜாதீயைஃ புஷ்பைரதிஸுரபிபிர்பில்வதுலஸீ–
யுதைஸ்சேமம்புஷ்பாஞ்ஜலிமஜித தேமூர்த்நி நிததே
தவ ப்ராதக்ஷிண்ய க்ரமண மகவித்வம்ஸி ரசிதம்
சதுர்வாரம் விஷ்ணோ ஜநிபதகதேஸ்சாந்த விதுஷா॥

மணங்கமழும் பற்பல புஷ்பங்களும், பில்வம், துளஸீ கலந்ததுமான இந்த புஷ்பாஞ்ஜலியை உமது சிரஸில் வைத்து மகிழ்கிறேனே. ஹேவிஷ்ணோ! இனி பிறப்பு வேண்டாம் என நம்பி நான்குமுறை உமக்கு பிரக்ஷிணம் செய்து எனது பாபங்களை நீக்கிக் கொள்கிறேனே.

(9)

नमस्कारोऽष्टाङ्गः सकलदुरितध्वंसनपटुः
कृतं नृत्यं गीतं स्तुतिरपिरमाकान्त त इयम्।
तव प्रीत्यै भूयादहमपि च दासस्तव विभो
कृतं छिद्रं पूर्णं कुरु कुरु नमस्तेऽस्तु भगवन्॥

நமஸ்காரோSஷ்டாங்கஃ ஸகலதுரித த்வம்ஸனபடுஃ
க்ருதம் ந்ருத்யம் கீதம் ஸ்துதிரபி ரமாகாந்த த இயம்।
தவ ப்ரீத்யை பூயாத் அஹமபிச தாஸஸ்தவ விபோ
க்ருதம் சித்ரம் பூர்ணம் குரு குரு நமஸ்தே
Sஸ்துபகவன்॥

ஹே பகவன்! அஷ்டாங்கங்களுடன் நான் செய்யும் நமஸ்காரம் எல்லா பாபங்களையும் நீக்க வல்லது. ஹேலக்ஷ்மீ காந்த! ந்ருத்யம், கீதம், ஸ்தோத்ரம் முதலியனவும் நான் செய்யும் இவை உமக்கு மகிழ்ச்சி தருவதாக ஆகட்டும். உமக்கு நமஸ்காரம். இதில் ஏதாவது குறை இருக்குமானால் அதை நீக்கி பூர்ணமாக்கிக் கொள்ளவேண்டும்.

**(10)**

**सदा सेव्यः कृष्णः सजलघननीलः करतले**
**दधानो दध्यन्नं तदनु नवनीतं मुरलिकाम् ।**
**कदाचित्कान्तानां कुचकलशपत्रालिरचना -**
**समासक्तः सिग्धैस्सह शिशुविहारं विरचयन् ॥**

ஸதா ஸேவ்யஃ க்ருஷ்ணஃ ஸஜலகனநீலஃ கரதலே
ததாநோ தத்யந்நம் ததனு நவநீதம் முரலிகாம்।
கதாசித் காந்தாநாம் குசகலசபத்ராலிரசஞு-
ஸமாஸக்தஃ ஸ்நிக்தைஸ்ஸஹ சிசுவிஹாரம்
ரசயன்॥

நீருண்ட மேகம் போல் கருத்த மேனியழகன் கண்ணன். அவன் சில சமயம் கையில் தயிர் சாதத்தையும், மற்றொரு சமயம் வெண்ணை அல்லது புல்லாங்குழல் வைத்திருப்பான். மற்றுமொரு சமயம், தன் வயது ஒத்த சிறுவரோடு சேர்ந்து விளையாடுவான். அதே சமயம் ப்ரியைகளின் மார்பகங்களில் பச்சைகுத்தி அழகுபடுத்துவான். அத்தகைய கண்ணன் சேவிக்க வேண்டியவனல்லவா!

பகவன் மானஸ புஜை முற்றிற்று

